விம்மலென்னும் பெயர் - விம்மலே மித்தலும் - விம் முதலுமாகும். ஆக (உ)

விளையென்னும் பெயர் - விளையென்கிளவி - சந் துவ் விளையும். ஆக (உ)

வில்லென்னும்பெயர் - வில்லேயொளியும் - விற்ப டையுமாகும். ஆக (ங)

விளக்கென்னும் பெயர் - விளக்கே யொளியும் - வி ளக்குமாகும். ஆக (உ)

விறப்பென்னும் பெயர் - விறப்பே செறிவும் - வெ ருவலும் பெருக்கமும். ஆக (ங)

வீசுதலென்னும் பெயர் - வீசுதல் கொடுத்தலும் எறிதலுமாகும். ஆக (உ)

வெடியென்னும் பெயர் - வெடியேவெள்ளிடை - வெருவுமாகும் ஆக (உ)

வெம்மையென்னும் பெயர் - வெம்மைவேட்கை - விளைவென விளம்புவர். ஆக (உ)

வெறியென்னும் பெயர் - வெறியேநாற்றமும் வே லனாடலும். ஆக (உ)

வெறுக்கையென்னும் பெயர் - வெறுக்கை செல்வ மும் - விழுப்பொருளுமாகும். ஆக (உ)

வேயென்னும் பெயர் - வேயேமூங்கிலும் - ஒற்று மாகும். ஆக (உ)

வேலனென்னும் பெயர் - வேலன்முருகன் - வெறி யாட்டாளன். ஆக (உ)

வேலியென்னும் பெயர் - வேலிமதிலும் - காவலு மாகும் ஆக (உ)

வேலையென்னும் பெயர் - வேலைதானே - கடலுங் கடற்கரையும், காலமுங்கூறும் - கருவியதாகும். (ங)

வேளாண்மையென்னும் பெயர் - வேளாண்மையு பகாரம் - ஈகையும் விளம்பும். ஆக (உ)

ஆதியிற்பொருள்-முற்றிற்று.

---



உ

கடவுள் துணை.

# அந்தத்துப்பொருள்.



அணங்கென்னும் பெயர் - தெய்வமுந் தெய்வத்-துவலைமமாதரும், மையலுநோயும் - வருத்தமுங் கொலையும், ஐயமென்றுரைக்கும் - அணங்கென்கிளவி. (௭)

அரியென்னும் பெயர் - கண்வரி கடல்பொன்- கிண்கிணிப் பெய்பரல், மன்னிறங்குதிரை - தவளைகுரங்கு, பகைவாள்சயனம் - வலிவண்டம் புகை, எனப்பதினைந்தும் - அரியெனப்புகல்ப - சிங்கந்திருமால் - திகிரியிரவி, இந்திரன்காற்றே - யமனேயங்கியென்- றங்கண்வடமொழிச் - சிதைவினரியாகும். (௨௫)

அளகமென்னும் பெயர் - மாதர்மயிரையும் - மாவின்முளளையும், கீரையுமளகம் - எனகிகழ்த்துவரே. (௩)

அளக்கரென்னும் பெயர் - கடலுநிலனும் - சேறுமளக்கர். ஆக (௩)

அளியென்னும் பெயர் - வண்டின்பெயரும்-மதுவுங்கொடையும், அன்புங்கூறும் அளியென்கிளவி. ஆ(௪)

ஆணையென்னும் பெயர் - ஏவன்மெய்ப்பாட் டிலாஞ்சனைசூளே, னுவயின்விறல்செயலும் -ஆணைக்கிளவி. ௫

ஆரமென்னும் பெயர் - சந்தனமாலைபூண- ஆத்திமுத்தென, வந்தனைவைந்தும் - ஆரமாகும் ஆக (௫)

ஆற்றலென்னும் பெயர் - வலியுஞ்செயலும் - வல்லாராற்றலும், ஆள்வினையுமுரைக்கும்- ஆற்றற்கிளவி. ௪

இடியென்னும் பெயர் - தகரமுஞ்சுண்ணமும்-தருப்பணப்பிண்டியும், இனையவையிடியென் - இசைத்தல் வேண்டும். ஆக (௧)

இதழெனும் பெயர் - பூவின்றோடும் - பனையிதழ்போல்பவும், வாயினதரமும்- இதழெனவைப்பர். (௩)

இராகமென்னும் பெயர் - கீதமுநிறமும் - செந்நிறக்கெழுவும், ஆதரவுமுடிகியலும் இராகமெனப்படுமே (௫)

இவர்தலென்னும் பெயர்- சேறலுமெழுச்சியும்-செறிபும்விரும்பலும், ஏறலுமிவர்தற் - கிளவிகூறும். ஆ(௫)

இறும்பூதென்னும் பெயர் - வியப்பிராசிவும் - சிறுதூறுமலையென, நயப்புடைகானகும் இறும்பூதாகும். ௪)

உலவையென்னும் பெயர் - மரத்திற்கோடும் - மருப்புங்காற்றும் - உணர்த்துமென்ப - உலவைகிளவி (௩)

உறையென்னும் பெயர் - நீர்முதலாகிய துளியும் மருந்து முதனோய்நீக்கி - இன்பங்கொடுக்கும், பொருளுநகூறை - மாசுகழுவுவர்நீரும், பாலூறுபிறையும்- காரமுமொழுகலும், ஓரிடைச்சொல்லும் உறையெனற் குரிய. ஆக (அ)

ஊக்கமென்னும் பெயர்- வண்மையுமுயற்சியும், மனத்தின்மிகுதியும், உண்மையுமுரைக்கும்-ஊக்கக்கிளவி(௪)

ஊர்தியென்னும் பெயர் - தேருமாவும்- சிவிகையுமென்றிவை, ஊர்தியென்னும்-பெயரிற்றோன்றும்.

எகினமென்னும் பெயர் - கவரிமாவும் - அனமுநாயும், எகினமென்பர் - இயல்புணர்ந்தோரே. ஆக (௩)

ஏமமென்னும் பெயர் - சேமங்காவல்- இன்பமிரவுபோன், ஏமாப்புமயக்க - ஏமமாகும். ஆக (எ)

ஓதியென்னும் பெயர் - மாதர்மயிரும்- மாலையுமன்னமும், ஓதியென்பர் - உணர்ந்திசினோரே. ஆக (௩)

ஓரியென்னும் பெயர் - ஆடவர் மயிரும் - முகவுமோரி. ஆக(௨)

ஓரையென்னும் பெயர்- கூட்டமுமகளிர் - விளையாட்டுமிராசிக் - கூற்றைபுமோரை - கிளவிகூறும். (௩)

கடியென்னும் பெயர்- வாசமும்பேயும் - மணம்புணர்வு மென்றிவை, காசின் றுரைக்கும் - கடியென்கிளவி. ஆக (௩)

கட்சியென்னும் பெயர் - காடுங் கூடும் - கட்சியாகும். ஆக (௨)

கட்டளையென்னும் பெயர் - நிறைபறிகருவியும்-உரையறிகருவியும், பிறவினையொப்பும - கட்டளைப்பெயரே. ஆக (௩)

கண்டகமென்னும்பெயர்-சுரிகையுடைவாள்- முள்ளிவைமூன்றும், கருதிற்கண்டகம்- என்னக்கருதுவர். (௩)

கம்பலையென்னும் பெயர் - இன்னுங்கோசை-நடுக்கமச்சம், கன்னித்தமிழோர் - சம்பலையென்ப ஆக (௫)

காணமென்னும் பெயர் - சொல்லிய முதற்பொருள்- துணைக்காரணமும், பல்வகையாடலும் - மாத்தின் பகுதியும், கல்வியுமெண்ணும் - காணமென்றாகும் (௫)

கருங்கையென்னும் பெயர் - கொன்றுவாழ் தொழிலினும் - வன்பணித் தொழிலினும், கன்றியதொழின்மை- கருங்கையெனப்படும்.

கருவியென்னும் பெயர் - கவசம்பல்லியம் - தொடர்பியாழ் படைக்கலம், கசுகமுகற்பூண் - தொகுதிமேகம், கல்லணையுபகாணம்-கழறுங்கருவி. ஆக (௰)

கழலென்னும் பெயர்- காலினடியும்-காருடுதோனும், காலினணியும்-கழலெனக்கருதுவர். ஆக (௩)

கழுதென்னும் பெயர் - வண்டும்பேயும்- இதணமுங்கழுதாம். ஆக (௩)

களமென்னும் பெயர்-மிடறுபொருகிலம் -கருமையிம்மூன்றும், களமென்றுரைப்பர் - கருதுங்காலே. (௩)

களரியென்னும் பெயர்-கருமஞ்செய்யிடமும்-களமும்பொருகிலனும், களரியென்பர்- கற்றுணர்ந்தோரே.

களனென்னும் பெயர்- பொய்கையுந் தொடர்பும்-மருதநிலமுனே, டெய்தியகளனெடு-நான்குங்களனே.(ச)

கறையென்னும் பெயர் - நிறமுமுதிரமும் - உரலுந்திறையும், கறையென்கிளவி - ஆமெனக்கருதுவர்.(ச)

கன்னலென்னும்பெயர் - சருக்கரைகரகம்- நாழிகைவட்டில்-உரைக்கிற்குடமும்-நாழிகையுங்கன்னல். (ரு)

காஞ்சியென்னும் பெயர் - எதிரூன்றுதலும்- நிலையின்மையுமா, மணிமேகலையும்- ஒருமரப்பெயரும், கருதுங்காஞ்சி - எனனுங்கட்டுரை. ஆக (ச)

காரியென்னும பெயர்- ஆலகஞ்சேசனிக்-கோண்மாசாதத்தார், இருணிறத்தனவும்- காரியெனப்படுமே.(௬)

காரிகையென்னும் பெயர்- அழகுமழகுடை-மாதருமதனெடு,கட்டளைக்கவித்துறையும்- காரிகையென்ப.

காழென்னும் பெயர் - தொல்பரல்சேகு-மணியின்கோவை, மாலையுமொளியும்- காழென்றுகும். ஆக (ரு)

கிழியென்னும் பெயர் - எழுதுபடமும்- இருநிதிப்பொதியும், கிழிபடுதுகிலும்-கிழியெனற்குரிய. ஆக (௩)

குயமென்னும பெயர் - அரிவையர் முலையும்-கொடுவாளுமிளமையும, கருதியவிம்மூன்றும் - குயமெனக்கருதுவர். ஆக (௩)

குவலயமென்னும் பெயர் - நெய்தலு நிலனு- குவலயமென்ப. ஆக (உ)

குளிரென்னும பெயர் - கிளிகடிகருவி - இலைமூக்கரிகருவி, குளிரேகுடமுழவு-ஞெண்டுமாகும்.ஆக (ரு)

குறிஞ்சியென்னும் பெயர் - மலைச்சார்நிலனும-செ

ம்மலர்முள்ளியும், குறிஞ்சிநிலப்பாடலும்- குறிஞ்சியெ
ருகும். ஆக (௩)

கூழென்னும் பெயர் - பல்வகையுணவும்பயிரும-பொ
ன்னும், கொள்பமாமேதா - கூழென்கிளவி. ஆக (௩)

கூளியென்னும்பெயர் - கட்புத்தொகுதி - பேயெ
னமூனறும், வைத்தனர்கூளி-ஆகவகுத்தே. ஆக (௩)

கைக்கிளையென்னும் பெயர்- ஒருதலைக் காமமும-
யாழிலோர்நரம்பும், தெரியிற் கைககிளை - எனப்பெயர்
சிவணும். ஆக (௨)

கொன்னென்னும் பெயர்- அச்சம்பயனிலி-காலம
பெருமையோ, டப்பெயர்நான்கும்- கொன்னெனவறை
வர். ஆக (௪)

கோவென்னும் பெயர்- அந்தரங்குலிசம்-பாரினொ
டத்திரம, வந்தநீர்திசை - மலைவேன்மனனவன்- விழிப
சுகோவென - வேண்டினர்புலவர். ஆக (௰௧)

கோதையென்னும் பெயர் - பூப்புனைமாலையும்-மாலை
புனைமாதரும், தோற்புனைவின்னாண்- டொடர்கைக்கட்
டியும், கோச்சேரன்பெயர் - மயிர்காற்றுங் கோதை. (௫)

கோலென்னும் பெயர்-நிறைபறிதுலாமும்-, அஞ்சநடெ
ழுதுகருவியும், இறைவன்முறைநடாததலும்-யாழ்நரம
பு மம்பும, குதிரைமதநிலையும-கோலென்றாகும. (௬)

கோளென்னும் பெயர்- அலர்கதிர் முதலாம-அம
ரருநாளு, கொலையுமிடையூறும-கோளென்றாகும. (௪)

சாமமென்னும பெயர் - யாமமோர்வேதம - உபா
யஞ்சாமம். ஆக (௩)

சாறென்னும் பெயர் - விழவுங்கள்ளும - சாறென
விளம்புவர். ஆக (௨)

சிக்கமென்னும் பெயர்- உச்சியுமயிர்வார்- கீப்புமு
றியும், சிக்கமென்னும்- பெயரொடுசிவணும. ஆக (௩)

சித்திரமென்னும் பெயர் - மெய்யேபோலப் - பொய்யையுரைத்தலும், செய்கோல்வடிவும் - அழகுஞ்சித்திரம். ஆக (௩)

சிலையென்னும் பெயர்- வில்லையுமலையையுஞ் - சிலையெனவிளம்புவர். ஆக (௨)

சீரென்னும் பெயர் - பல்வகையியங்களின் - ஓசைபாரம், ஒல்லுதல்காற்றண்டை - ஒண்புகழழகு, செல்வஞ்சீர்மை - சீரென்றாகும். ஆக (எ)

சுடரென்னும் பெயர்- மதியுஞாயிறும் - கனலியுமற்றைய, பொதுவுறுமொளியும் - சுடரென்றாகும். (௪)

செச்சையென்னும் - பெயர் - வெட்சியும் வெள்ளாட்டேறுஞ்செச்சை. ஆக (௨)

செம்மலென்னும் பெயர் - இறைவன்பழம்பூ- வீரர்புத்திரர், அறைபிற செம்மைமேம்பாட்டுஞ் செம்மல். ஆக (௫)

சேயென்னும் பெயர்-செவ்வாய் முருகன - இளமைபுத்திரர், இவ்வாறெல்லாஞ் - சேயெனவிசைப்பர். ச

ஞெள்ளலென்னும் பெயர் - சோர்வுமிகுதல - உடன்படல்பள்ளர், நாவிஞெடொலியும் - தெருவுஞெள்ளல்.

தண்டென்னும் பெயர் - தண்டுமூன்று - தடியுந்தண்டாம். ஆக (௨)

தபனனென்னும் பெயர் - அனலுமருக்கனும் - தபனனென்றாகும். ஆக (௩)

தாணுவெனனும் பெயர் - குற்றியைந்தூணையும்- தாணுவெனப. ஆக (௨)

தாரென்னும் பெயர் - பூவும்பூமாலையும் - போர்முன்செலகொடிப்படையும், ஆவணகமணியும் - கிண்கிணிமாலையும், தாவில்பெயர்கொடை - தாரென்றாகும். (௫)

தாவரமென்னும் பெபர் - மாமுமலையும் போல நிற்பன, தருபெயர்தானே - தாவரமாகும்.

தானையென்னும் பெயர் - கைப்படை காலாட்-படையேயாடை. தப்பிலிம்மூன்றும்- தானையென்றாகும்.

திணையென்னும் பெயர் - குலமு மொழுக்கமும்- ஒழுக்கநிகழ்ந்த- நிலமுந்திணையென- நிகழ்ந்துங்கிளவி.

துஞ்சலென்னும் பெயர்- சாதலுநிலைத்தலும்- உறங்கலுந்துஞ்சல். ஆக(௩)

துத்தியென்னும் பெயர் - சுணங்கும் பொறியும்- துய்ப்பனவுந்துத்தி. ஆக (௩)

துப்பென்னும் பெயர்- வண்ணம்பவளம்- வலியோடரக்கென், றெண்ணியநான்கும்- துப்பெனவிசைப்பர். ()

தூவியென்னும் பெயர் - பசையுந்தகையும் - பறவையிறகும், தொகுபெயர்தாமே - தூவியென்றாகும்.

தொடியென்னும் பெயர் - ஒருபலம்வளைபே-தொடியென்றாகும். ஆக (௨)

தொய்யிலென்னும் பெயர் - உழவுநிலத்தில்- எழுவதோர்புதலும், குழையு மகிழ்ச்சியும்- அழகு மென்றிவை - துயருங்கூறும் - தொய்யிற்கிளவி. ஆக (௫)

நகையென்னும் பெயர்-மகிழ்ச்சியின் விளையாட்டின்-வருநகைதானே, இகழ்ச்சியிடத்துமெய்தற்குரித்தே.

நவமென்னும் பெயர் — ஒன்பதுங் கேண்மையும் - புதுமையுநவமே. ஆக(௩

நவிரமென்னும் பெயர் - மலையு முச்சியும் - மருதயாழ்த்திறனும் - நவிரமென்னும்-நடைபெற்றியலும். (௩)

நாகமென்னும் பெயர் - அரவுங்காரீயமும்- அமரர்நாட்டொருபெயரும், மலையும்யானையும் - ஒருமரப்பெயரும், தெரியினாகம- எனப்பெயர் சிவணும். ஆக (௬)

நாகென்னும் பெயர் - கோடுமெருமையும்- மரையு நத்தும்- மீன்பெணுமிளமையும்- கெழுமையுமிளமரமு ம், நாகெனும்பெயரின் - நடைபெற்றியலும். ஆக (அ)

நாஞ்சிலென்னும் பெயர் - எயிலுறுப்புழுபடை-நா ஞ்சிலாகும். ஆக(உ)

நாணென்னும் பெயர் - மாதர்மங்கலமும் - அணியு மாநமும், பாசமுநாணெனும் - சொல்லிற்பயிலும். (ச)

நீலமென்னும் பெயர்- நீலமலரும் - நீலநிறத்தனவு ம்-நீலமென்னும்-பெயரொடுநிகழும். ஆக (உ)

நூழிலென்னும்பெயர் - குவவிற்படரோர் - கொ டிப்புல்லுநூழில். ஆக (உ)

நேரென்னும் பெயர் - உடன்படலுவமை- ஒத்தல் நுட்பம், சமன்பாதிமிகுதி - உடன்படலுவமை- ஒத்தல்

நுட்பம், சமன்பாதிமிகுதி - தலைப்பாடு தனிமையென, நிகழ்ந்தவொன்பானும்-நேரென்கிளவி. ஆக (கூ)

பகலென்னும் பெயர் - நாளுமொழியும்- நடுவும்பிள த்தலும், பாகுபடுத்தலும்- பகலென்கிளவி. ஆக(ரு)

படையென்னும் பெயர்- சயநம்பல்லணம்- தானையுமு நாஞ்சில், ரயனென்றுரைக்குகும்-படையென்கிளவி.(ச)

பண்ணையென்னும் பெயர் - ஆயமுமகளிர்- விளை யாடற்றொழிலும், பாய்புனற் படுகரும் - பண்ணையென் றுகும் ஆக (ந)

பதமென்னும் பெயர் - சோறும்வழியும்- சொல்லு ங்காலும, ஈரமுஞ்சேமமும- புனலுங்காலையும், பாவலர் பதமேனப் பகருங்கிளவி. ஆக (அ)

பயிரென்னும பெயர் - விதந்துகட்டிய வழக்கும- விலங்கொடு புட்குரலும, பசுமபுல்லும பைங்கூழும- பயிரென்றகு. ஆக (ரு)

பரியென்னும பெயர் - வருத்தமுஞ் செல்வமும- மா விரைமும, பாதுகாத்தலும- பரியென்கிளவி. ஆக (ச)

பல்லமென்னும் பெயர் - காடியின்பெயரும்- கணக்கிலோர்குணிப்பும்,பகழின்பெயரு-பல்லமென்றாகும். ()

பற்றலென்னும் பெயர் -தொடலும் வளைத்தலும்-பிணித்தலுமாற்றல். ஆக (௩)

பனியென்னும் பெயர்-அச்சமுந்துன்பமும்-நடுக்கமுந்துகிநமும், பற்றிய சீதமும்-பனியெனப்படுமே. (௫)

பாணியென்னும் பெயர்-நெடித்தற்பொழுதும்-நீரொடுகையும், பாடற்பல்லியமும் - பாணியென்றாகும். (௪)

பாலையென்னும் பெயர் - நீரினறிவேனிற் - றெறுநிலனுமந்நிலப், பாடலும்பாடற்-சுவையும் பாலை.ஆ(௩)

பாலென்னும் பெயர் - பகுத்தல்பக்கம்- திசையியல்பென்ன, வகுத்தநான்கும்-பாலென்றாகும். ஆக (௪)

பாழியென்னும் பெயர் - ஊரும்வலியும் - உறையுளுஞ்சயநமும், பாழியென்று- பகரப்படுமே. ஆக (௪)

புனையென்னும் பெயர் - உயர்வுங்குற்றமும் உவமைச்சொல்லும், புனையென்கிளவிப் - பொருளொடுபுணரும். ஆக (௩)

புலவரென்னும் பெயர்-அமரருங்கவிஞரும-ஆடுநரும்பாடுநரும,பொருநருமறிஞரும்-புலவரெனப்படுமே. (௬)

பூவையென்னும் பெயர் - காயாமரமும் - நாகணவாய்ப்புள்ளும், பூவை யென்னும் - பொருளொடு புணரும். ஆக (௨)

பொதியென்னும் பெயர் - கிதியுஞ்சொற் பயனும நிகழ்பலபண்டமும், பொதியென்கிளவிப்-பொருளொடு புணரும். ஆக (௩)

பொருநரென்னும் பெயர் - பொரும்போர்த்தலைவரும்- பெருங்கூத்தின் கொடியரும், பொரும்படை வீரரும்- பொருநரெனப்படுமே. ஆக (௩)

பொறியென்னும் பெயர் - திருவொடைம் பொறி யும்-செல்வமிலாஞ்சனையும், புகழ்ச்சிப் புலவர் - பொறி யெனப்புகல்வர். ஆக (௪)

பொறையென்னும் பெயர் - மலைசுமைபாரம்-அம்பற் சேந்தனே-டுலவியபொருமைபார்- ஐந்தும்பொறையே.

மடங்கலென்னும் பெயர் - ஊழித்தீச்சிங்கம்- உக முடிவிடியென, வாழித்தமிழோர்- மடங்கலென்ப-கொ டுங்கூற்றின்பெயரும் - நோயுங்கூறும். ஆக (௬)

மடலென்னும் பெயர் - பூவினிதழும் - பனையிதழ் போல்பவும், வாய்பாடுரைக்கின-மடலென்கிளவி. ஆ(௨)

மதுவென்னும் பெயர்- மீதனுந்தேறலும்- மதுவெ னச்செப்புவர். ஆக (௨)

மருதமென்னும் பெயர் - பழனகிலனும் - அந்நில ப்பாடலும்-மருதமென்னுப-பெயரின்வழங்கும் ஆக(௨)

மள்ளரென்னும் பெயர் - அருந்திறல் வீரர்க்கும் - பெருந்திறலுழவர்க்கும், வருந்தகைத்தாகும்_ மள்ளரெ னும்பெயர். ஆக (௨)

மறமென்னும் பெயர் - கொலையுஞ் சேவகமும் - கொடுவினைச்செயலும், வலியுஞ்செற்றலும் - மறமென ப்படுமே. ஆக (௫)

மன்னென்னும் பெயர் - மன்னலு மிடைச்சொல் லும்-இறையுமன்னே ஆக (௩)

மாடென்னும் பெயர்- மணியுஞ்செல்வமும்-நிறை யும்பக்கமும், தகுமுமாடென் - றுறைக்கத்தகுமே. (௫)

மாலையென்னும் பெயர் - பொன்னின் மணியிற - பூவிற்சொல்லில், இன்னுறத்தொடுத்தலும் - இரவுமந்தி யும், மன்னுமியல்பும்-மாலையென்றாகும். ஆக (௪)

மாலென்னும் பெயர் - மாயோன்பெயரே- மயக்க ம்வேட்கை, மேகங்காற்று - பெருமைகருநிறம், சோழ ன்புதனென - சொற்றிடுமாலே. ஆக (௯)

...யென்னும் பெயர் - ஆயமடமை-பொன்னு
லோ...டி, ஓலைபுளிமா-மாழையென்றிசைக்கும். (சு)

முருகென்னும் பெயர் - விழவுங்குமர - வேளுமி
ளைமையும், நறையுநாற்றமும் - அகிலுமெழுச்சியும்,வெ
றியாட்டாளனும் - முருகெனவிசைப்பர். ஆக (அ)

முல்லையென்னும் பெயர் - காடுசார்நிலனும்-கான்
மல்லிகையும், மோடுபடுவென்றியும்-கற்புமுல்லை. (௪)

முளரியென்னும் பெயர்-எரியுந்தாமரையும்-நுட்ப
முமுண்மரமும், உரியகடுமென் - றைந்துமுளரி. (௫)

மையென்னும் பெயர் - குற்றமு மாடும் - களிமை
யுங்கொண்டலும், மற்றிவைமையெனும்- சொல்லொடு
வருமே.. ஆக (௪)

வஞ்சியென்னும பெயர்- மேற்செலவும்பர் விகற்ப
த்தொருபாவும், ஓர்கொடிப்பிறப்பும்- அதனுவமை மா
தரும, மற்றரும்பெயர்க்கொடை-வஞ்சியென்றாகும் (௬)

வம்பெனனும் பெயர் - கச்சுநிலையின்மை-புதுமை
கந்தம், ஒத்தநானகும்-வம்பெனவுரைப்பர். ஆக (௭)

வயிரமென்னும பெயர் - செற்றமுங் கூர்மையும-
சேருமணியும்,வச்சிரமும்வன்மையும-வயிரக்கிளவி. (௮)

வயினென்னும் பெயா -வயிறேபிடமனை-மூன்றும
வயினும். ஆக (௯)

வளமென்னும் பெபர் - பண்டமும் வளப்பாடும-
வளமெனபபடும்ம. ஆக (௨)

வாகையென்னும் பெயர் - ஆள்வினைமுதலாம-செ
ய்கையுநலனும், கைவலமுதலாம-கல்வியுமாணமையும,
சாலபுமுதலாம - பண்புமங்கையும, ஒழுக்கமுதலாம தவ
முமறததுறையும், ஒருவரினொருவா - வென்றிமிகுதி
யும், வருவனவெல்லாம - வாகையெனும பெயர்.

வாமமென்னும் பெயர் - குறளையழ ங்கே யிடப்பால், இவைபொருநான்கும்-வாமமெ (௪)

வாரணமென்னும் பெயர் - யானையுங் ழியும் - சங்கும்வாரணம். ஆக (௩)

வாரியென்னும் பெயர் - கடலுநீர்மிகுதியும் - கத வும்வாரிஇயர், மடையுமென்றிவை - வாரியென்ப. (௫)

விதியென்னும் பெயர் - இயல்புஞ்செயலும - விதி யென்றாகும். ஆக (௨)

வியங்கோளென்னும் பெயர் - எண்ணில்கொளலு ம்-ஏவலும் வியங்கோள். ஆக (௨)

விருத்தியென்னும் பெயர் - உரியசொல்லும - உரி யபொருளும், விரியவுரைப்பது - விருத்தியாகும்.

விழுமமென்னும் பெயர்-சிறப்புச்சீர்மை-இடும்பை யிம்மூன்று, விரிக்கின்மேலோர்- விழுமமென்ப.ஆக(௩)

விளரியென்னும் பெயர் - யாழினோர் நரம்பும்-திற னில்யாழும், வேட்கைமிகுதியும்-இளமையும்விளரி (௪)

வெள்ளையென்னும் பெயர் - வெள்ளாடுவெண்பா வெள்ளைவடிவின், வெள்ளையென்னும - பெயரின்விளம் புவர். ஆக (௩)

வேழமென்னும் பெயர் - யானையுங்கரும்பும - கொ றுக்கச்சியுடனும், வேயுங்கூறும - வேழக்கிளவி. (௪)

வையென்னும் பெயர் - நெல்லினறுளும-புல்லுங் கூர்மையும, சொல்லின்மூன்றும்-வையென்றாகும். (௩

வைகலென்னும் பெயர் - கழியுநாளும - புலரிக்கா லையும, தழுவுமவைகல் - தங்கலுமுரித்தே. ஆக (௩)

வையமென்னும் பெயர் - சிவிகையுமானேறும- சகட முந்தேரும, அவநியுமவையம-எனப்பெயராகும. (௫)

புலவர்க்கிய- கல்விச்செல்விக், கமிழ்துசுவையீந் வருமம்பறவின்பத், தொருபெருஞ்செலவ- னருவந்தை ச்சேந்தன், பகர்வுற்றதிவாகரத்துப் - பதினொன்றாவது,

தொருசொற் பல்பொருட் பெயர்த்தொகுதி

முற்றிற்று.

---



௨

கடவுள் துணை.

பன்னிரண்டாவது,

பல்பொருட்கூட்டத்

# தொருபெயர்த் தொகுதி.

மூலபாடம்.

---

கூறியதுகூறினும் - குற்றமில்லை, வேறொரு பொருளை - விளக்குமாயின், முன்னசெய்தபதி - னொருதொகுதியுள்ளும் வந்தனவாலொரு - சொற்பல்பொருட்பெயர்த், தொகுதியின்வந்த-சொற்களென் னெனில், ஆண்டுச்சிறப்பு - வகைக்கெய்தியவை, ஈண்டுபொதுவைக் கெய்தவுமபடுமே.

ஒன்றென்னும் பெயர் - ஒன்றென்பதுவே, வீடுபேருகும்.

இருமையென்னும் பெயர்-இருமையென்ப- திம்மையுமறுமையும்.

இருவினையென்னும் பெயர் - இருவினை நல்வினை-தீவினையாகும்

இருவகைத்தோற்றமென்னும் பெயர் - இருவகைத்தோற்றம்- சராசரமென்ப.

இருவகை யறமென்னும் பெயர் - இருவகையறமே இல்லறந்துறவறம்.

இருவகைக் கந்தமென்னும்பெயர் - இருவகைக் கந்தம் - நற்கந்தந்துர்க்கந்தம்.

இருசுடரென்னும் பெயர் - இருசுடர்சந்திர - சூரியராகும்.

இருமரபென்னும் பெயர் - இருமரபு தாய்வழி தந்தைவழியே.

இருவகைப்பொருளென்னும் பெயர் - இருவகைப் பொருள் - கல்விப்பொருள் செல்வப்பொருள்.

இருவகையின்பமென்னும் பெயர் - இருவகை யின்பம்-இல்லதுமுள்ளதும்.

இருவகைவீடென்னும் பெயர்- இருவகைவீடு- பற்றுவிடு பொருள்விடு.

மும்மையென்னும் பெயர் - மும்மையும்மையும்-இம்மையுமறுமையும்.

முப்பொறியென்னும் பெயர் - மனமும்வாக்கும்-காயமுமுப்பொறி

முச்செய்கை யென்னும் பெயர் - படைத்தல் காத்தல்- அழித்தனமுச்செய்கை.

முக்குற்றமென்னும் பெயர் - முக்குற்றங்காமம்-வெகுளிமயக்கம்.

முக்காலமென்னும் பெயர் - இறந்தகாலமெதிர்-காலநிகழ்காலம். எனமொழிந்தமூன்று - காலமாகும்.

மூவிடமென்னும் பெயர் - முன்னிலை படர்க்கை - தன்மை மூவிடம்.

மூவுலகென்னும் பெயர் - பூமியாகாயம் - சுவர்க்கமென்ப, தாமொருமூன்று - நிலயெனுந்தகைய.

மூவகை மொழியென்னும் பெயர் - பட்டாங்கு பேசல் - பழித்தல் புகழ்தலென, முட்டின்றாகும்- மூவகைமொழியே.

முச்சுடரென்னும் பெயர்- முச்சுடராதித்தன்- சந்திரனங்கி.

முத்தீயென்னும் பெயர் - அந்தணர்முத்தீ - காருகபத்தியம், தென்றிசையங்கி - ஆகவநீயம்.

முச்சிவவனமென்னும் பெயர் - உத்தரம்விந்த-பூ தவனமென, ஒருமூன்றாகும் - சிவவனமே.

முக்குணமென்னும் பெயர்- முக்குணஞ்சாத்துவி தம்- இராசதந் தாமதம்.

இவற்றுள் சாத்துவிதகுணம் - சாத்துவிதஞானம்- தவமுண்மைநல்லருள், ஆர்த்தமோநமோ- டைம்புலன டக்கல்.

இராசதகுணம்-தானந்தவமே-தருமம்பேணல்,ஞானங்க ல்வி-நலனிலைதெரிதல், ஈனமில்லா-விராசதகுணமே.

தாமதகுணம் - காமதகிறைபே - ருண்டி மடிவஞ் சம் காமகீதிக்கே - டுறக்கஞ்சலமே.

மூவகைத் தானமென்னும்பெயர்-தலையிடைகடை யென - மூவகைத்தானம்.

இவற்றுள் தலைப்படுதானம்- அறத்தினீற்றிய- அரு ம்பெரும்பொருளை, புறத்துறை குற்றமூன் - றறுத்தந ற்றவர்வயின், உள்ளமுவந்தீதல் - தலைப்படுதானம்.

இடைப்படுதானம் - ஆதுலர்குருடர் - மாதர்முத ற்பிறர், சிறுமையைப்பற்றி - யனமிரங்கியீவ, திடைப படுதானம் - என்னப்படுமே.

கடைப்படுதானம் - ஆர்வம்புகழே- அச்சங்கை மா று, காரணங்கண்ணோட்டம் - கடப்பா டென்றிவை, ஏ ழுங்கடைப்படு - தானவுதவி.

திரிகடுகமென்னும் பெயர் - திரிகடுகஞ்சுக்கு- மிள குதிப்பிலி.

திரிபலையென்னும் பெயர் - திரிபலையாவது - கடு நெல்லித்தான்றி.

திரிபுரமென்னும் பெயர்- மும்மதில்பொன்னும்-வெள் ளியுமிரும்பும், அன்னசிவன்முன்-னழித்தமுப்புரமே.

சூரியன்மூவகைவீதியின் பெயர் - திருத்தகுமேட ம்- இடபமிதுனம்.

நானிலத்தின் பெயர்-நானிலங்குறிஞ்சி- முல்லை மருதநெய்தல்.

சதுரங்கமென்னும் பெயர்- சதுரங்கம்யானைதேர்-குதிரைகாலாள்.

நாற்கரணமென்னும் பெயர் - மனம்புத்தி யாங்காரம்-சித்தநாற்கரணம்.

நாற்கதியென்னும் பெயர்-நாற்கதியும்பர்-மக்கள் விலங்குநரகர்,

நால்வகை இழிச்சொல்லென்னும் பெயர் - பொய்குறளை கடுஞ்சொல - பயனில சொல்லென், இவ்வகை நான்கும் - இழித்தசொல்லே.

நால்வகைவேதத்தின்பெயர்-நால்வகைவேதம்-இருக்குத் தைத்திரியம, சாமவேதம் - அதர்வணந் தானே.

நால்வகை யரணென்னும் பெயர்-மலையரண் காட்டரண் - மதிலாணீரரண், அவையது சிறப்பின்-நால்வகையரணே.

நால்வகைக் கேள்வியென்னும் பெயர்-அறம் பொருளின்பம்- வீடெனநான்கும், திறந்தெரிந்துகேட்டல்-நால்வகைக் கேள்வி, சொன்னகானகினும- ஒத்தேயொழுகுதல், ஐவகைக்கேள்வி - ஆமெனவறைவர்.

நால்வகைப் புலமை யென்னும் பெயர் - கவியே கமகன-வாதிவாக்கியென, இவையொரு நான்கே-புலமைக்கியல்பே.

இவற்றுட் கவியின்வகை-ஆசுமதுரம் - சித்திரம்வித்தாரமென - பாவகை பாடுவோன்-கவியெனப்படுமே.

கமகன்வகை - ஞானபசுசெமபொருள்-நடையினைப்பொருளுப, காசினறுவாப்போன் - கமகனுகும.

வாதிவகை - ஏதுவுமேற்கோளும - எடுத்துக்காட்டி, போதினளவும்- செய்துதன் சொன்னிறீஇ, வாதிற்பிறர்சொன் - மறுப்பான்வாதி.

யீஉ-வது, பல்பொருட்-கூட்த்-பெயர்த்தொகுதி. உாள

வாக்கியவகை-அறம்பொருளின்பம்-வீடெனுந்திற ங்கள், கேட்கவேட்க-இனியனகூறும், ஆற்றலுடையோ ன்- வாக்கியாகும்.

அன்றியும் ஆசுகவிகை-கொடுத்தபொருளில்- தொ டுத்தவின்பத்தில், அடுத்தபொழுதில - பாடுவதாசுகவி.

மதுரகவிவகை- பொருளின்பொலிவும் - சொல்லி ன்செல்வமும், தொடையுந் தொடைக்கண் - விகற்பமுந் துறைந், றுருவகமுதலாம்-அலங்காரமுட்கொண், டோ சைபொலிவுற் - றுணர்வோருளங்கட்கு, மாகடலமிழ் தமபோற் - பாடுதன்மதுரகவி.

சித்திரகவிவகை - மாலைமாற்றே - சக்கரஞ்சுழிகு ளம், ஏகபாதம்-எழுகூற்றிருக்கை, காதைகரப்பே- கர ந்துறைப்பாட்டே, பாத்மயக்கே - பாவின்புணர்ப்பே கூடசதுக்கம - கோமுத்திரியே, ஓரினத் தெழுத்தால- உய்ந்தபாட்டே, ஒற்றுப்பெயர்த்தல் - ஒருபொருட்பா ட்டே, சித்திரப்பாவே-விசித்திரப்பாவே, விகற்பநடை யே - வினுவுத்தரமே, சருப்பதோபத்திரம - சார்ந்தவெ ழுநதே, வருக்கமுமற்றும - வடநூறகடலுள, ஒருக்கு டன்வைத்த - உதாரணநோக்கி, விரித்து மறைத்தும- விரக்கவிப்பாட்டும், தெரித்துப்பாடுவது-சித்திரகவியே.

வித்தாரகவிவகை - மும்மணிக்கோவையும்- பண மணிமாலையும், மறமுங்கலிவெண் - பாட்டுமடலூர்ச்சி யும், கிரீடையுங்கூத்தும - பாசாண்டத்துறையும, விரு த்தகவிதையும - இயலிசைநாடகத்தொடு, விரிததுப்பா டுவது - வித்தாரகவியே.

நாலவகைப் புண்ணியத் தோற்றமென்னும் பெ யர் - நாலவகைப் புண்ணியத் - தோற்றந்தவத்துடன், மேலாமொழுக்கம் - தானங்கல்வி.

நால்வகை நிலையென்னும் பெயர் - நிலையோர்நால் வகை - நிலைபைசாசம், ஆலிடமண்டிலம் - பிரத்தியாலீ டம.

இவற்றுள் பைசாச நிலைவகை - ஒருகாணிலைநின் ெறாருகான்முடக்கும், பரியாயமென்பது - பைசாசநிலை யே.

ஆலீடநிலைவகை - வலக்கான்மண்டலித் - திடக்கா ன்முந்துறும், அதன்பெயராலிட - நிலையதாகும்.

மண்டிலநிலவகை - இருகான்மண்டலித் - திடுதன் மண்டிலநிலை.

பிரத்தியாலிட நிலைவகை- வலக்கான்முந்துற் -றிட க்கான் மண்டலிப்பிற், பிரத்தியா லீடம் - எனப்பெயர் பெறுமே.

நான்குயிர்த்தோற்ற வகைப் பெபர் - நிலவுறுபை யில்- முட்டையில் நிலத்தில, மெய்யுகவியர்வையில்-நா ன்குயிர்த்தோற்றம்.

ஐந்திணைவகைப் பெயர் - ஐந்திணைகுறிஞ்சி - பா லைமுல்லை - வந்தநெய்தல் - மருதமாகும்.

பஞ்சவாசவகைப் பெயர்-தக்கோலமேலம்-இலவங்க ஞ்சாதிக்காய், கர்ப்பூரமென்றிவை - கமழ்பஞ்சவாசம்.

பஞ்சாங்க வகைப்பெயர் - திதியேவாரநாள்-யோ கம்கரணமெனப், பகருஞ்சோதிடப்- பஞ்சாங்கமாகும்.

பஞ்சமாசத தவகைப பெயர் - பஞ்சமாசத்தம- தோறுளைநரம்பு - கஞ்சனைபாடல் - எனக்கழறினரே.

மதனன் பஞ்சபாணவகைப்பெயர் - மதனன்பஞ்ச- பாணமாவன, முலலைபசோகு- முழுநீலஞ்சூதம்பூ, அல் லிமுளரியோ - டைந்தெனமொழிப.

பஞ்சபாணச் செயல்வகை - மதன்பஞ்சபாணச் - செயலுன்மத்தம், தீரஞ்சந்தாபம் - வசிகரணமோகமம.

பஞ்சசயநவகைப் பெயர் - மயிரின்சேணம் - வண்பஞ்சு தூவி, பயிற்றுக்தணவிப்-பாய்பஞ்சசயனம.

சயநவகை - மலர்ச்சயநஞ்சலசயநம் - தோற்சயநமாதி, பழிப்பில் பதினேந் - தாகுஞ்சயனம்.

பஞ்சபாதக வகைப் பெயர்- பஞ்சபாதகங்கொலை-களவுகள்ளுண்டல், எஞ்சலில்குருசிந்தை- பொய்யுமென்ப.

ஐம்பால் வகைப்பெயர் - ஒருவனொருத்தி-பலரொன்று பலவன, அறியக்கூறிய - பாலைந்தாகும்.

ஐம்பான் முடிவகைப் பெயர்- ஐம்பான்முடியே - கொட்டைசுருள்குழல், வம்பார்பனிச்சை-வாரமயிர்முடியே.

ஐந்துண்டிவகைப் பெயர்- கடித்துப்பருகி- விழுங்கிநக்கி - எடுத்துச்சுவைத்தல் - இவையைந்துண்டி.

குதிரைநடைவகைப் பெயர் - மல்லகதிமயூரகதி-வாநரகதியொடு, சொல்லியசசகதி - சரகதி யென்னப், பல்லியற்பரிமாவிற் - கைந்தொழினடையே.

ஐவகைவிருப் பெயர் - அறியான்வினவல்-அறிவொப்புக்காண்டல், ஐய மறுத்தல்-அவனறிவு தான்கோடல், மெய்யவர்க்குக் காட்டலோ- டைவகைவினவே.

ஈசனைம் முகவகைப் பெயர்- சத்தியோசாதம்-வாமமகோரம், தற்புருடமீசாநமென - ஈசர்க்கைம்முகம்.

பஞ்சபூத வகைப்பெயர் - மண்ணுநீரும் - கனலுங்காற்றும், விண்ணும்பஞ்ச பூதமென்ப.

ஐம்பொறிவகைப் பெயர்- மெய்வாய் கண் மூக்கு-செவியைம்பொறியே.

ஐவகைத்தாயர் வகைப் பெயர் - பாராட்டுந்தாய்-ஊட்டுந்தாய் முலைத்தாய், கைத்தாய் செவிலித்தாய் ஐந்தெனக்கழறுவர்.

அந்தணராறுதொழில் வகைப் பெயர் - ஓதலோது வித்தல் - வேட்டல் வேட்பித்தல் ஈதலேற்றல்-என்றி ருமூவகை, ஆதிக்காலத் - தந்தணராறுதொழில்.

அரசராறுதொழில் வகைப் பெயர் - அரசாறுதொழில் - ஓதல் வேட்டல், புரைதீரப்பெரும் - பார்ப்புரத் தலீதல், கரையறுபடைக்கலம் - கற்றல்விசயம்.

வணிகராறுதொழில்வகைப் பெயர் - வணிகராறுதொழில் - ஓதல்வேட்டல் - ஈதலுழவு-பசுக்காவல்வாணிகம்.

வேளாளராறுதொழில்வகைப் பெயர் - வேளாளராறுதொழில் - உழவுபசுக்காவல், தெளளிதிண்வாணிபம் குயிலுவங்காருகவினை, ஒள்ளியவிருபிறப்- பாளர்க்கேவல்செயல்.

இவற்றுள் குயிலுவத் தொழில்வகை - குயிலுவம் வாத்தியம் - கொட்டுதலாகும்.

காருகவினைவகை - பருத்திநூல்பட்டுநூல் - அமைத்தாடையாக்கலும், சுமத்தலும் பிறவும்-காருகவினைத் தொழில்.

ஆறங்கவகைப் பெயர் - ஆறங்கமந்திரம் - வியாகரணநிகண்டு, சந்தோபிசிதி - நிருத்தஞ்சோதிடம்.

அறுசமயவகைப்பெயர் - அறுசமயம் வைசே-டிக நையாயிகம், மறுவின்மீமாஞ்-சையாருகதம், பௌத்தம் பிரதிலோ - காயிதமென்னும் பெற்றிய.

பாடாண்டத்துறை வகைப்பெயர் - பாடாண்டத் துறையும்-இவற்றுட்பலவாம், பேசிற்றொண்ணூற்-றறு வகைப்படுமே.

ஆறுட்பகை வகைப்பெயர்-ஆறுட்பகையாமம்-வெகுளியுலோபம், மாறுகொண்மோகம் - மதமாற்சயம்.

அறுவகைத்தானையின் பெயம் - வேற்றானைவாட்டானை - விற்றானை மேலோர், தேர்த்தானைரிபத்தானை

மெ-வது,பல்பொருட்கூட்த்-பெயர்த்தொகுதி. உாமெக

களிற்றுத் தானையென, ஆற்றல் சான்ற - அறுவகைத் தானை,

நன்னுட்டமைதி யறுவகைப் பெயர் - செல்வம்வி ளைவு • பல்வளஞ் செங்கோன்மை, கொல்குறும் பின்மை - கொடும்பிணியின்மை, இவ்வயினுறும் - நனுட்டமைதி,

அறுசுவை வகைப்பெயர்- அறுசுவைதித்தித்தல்- புளித்தல்கைத்தல், மறுவறு துவாத்தல் - கூர்த்தல்கா ழ்த்தல்.

அரசியலறுவகைப்பெயர் - படையுங்குடியும்- கூழுமமைச்சும் - அரணுநட்பும் - அரசியலாறே.

அறுவகையரசியலின் பெயர் - அறநிலையறமும் - மறநிலையறமும், அறநிலைப்பொருளும் - மறநிலைப்பொருளும், அறநிலையின்பமும் - மறநிலையின்பமும், எனவறுவகைத்தே - உலகினடையே.

இவற்றுள் அறநிலையறத்தின்வகை - வருணக்காப்பிற்-பிறழாநெறிநிலை, பெறுவற் பொருளாற் - பேணும் பெற்றி, அறநிலையறமென் - றறைந்தனர்புலவர்.

மறநிலையறத்தின்வகை - ஆநிறைமீட்டல்- அரும் வகைதெறுதல், ஊகமில்செஞ்சொற் - றுதவிப்போர்வயின், ஈகஞ்செய்தலும் - மறநிலையறமே.

அறநிலைப்பொருள்வகை- நெறிவழிநின்று-நெறியாலுழந்து, பெரும்பொருளென்ப - அறநிலைப் பொருளே.

மறநிலைப்பொருள்வகை-அமருழந்துகொண்டவும்-அருந்திறைகொண்டவும்,தவறுசெய்தீயோர்-கண்டப்பொருளும், கவர்சூது வென்றவும் - மறநிலைப்பொருளே.

அறநிலையின்பவகை, ஒத்தகுலமும்- ஒத்தவாயுளும், ஒத்தசெல்வமும் - ஒத்துநலனும், அத்தகவுடையதறநிலையின்பம்.

மறகிலேயின்ப வகை - எதுதழுவல்- இலக்கமெய்தல், கூறுபொருள்கொடுத்தல் - வலிதிற்கோடல், மாறுபடுகிலேயும் - மறகிலேயின்பம.

அறுவகைக்கருமபூமிக்குரிமைவகைப்பெயர்- உழவுதொழிலே - வரைவுவாணிகம், விச்சைசிற்பம - என்என்றித்திறத்து, தொழில்கற்ப நடையது - கருமபூமி.

போகபூமியின்வகை- பதினாட்டை-குமானும்விதிவழி, பன்னீராட்டை-குமரியுமாகி, ஒத்தவன்பினும்-ஒத்தலத்தினும், கற்பகநன்மா-நற்பயனுதவ, ஆகியசெய்தவத் - தனவுமவ்வழி, போகநுகர்வது-யோகபூமி.

போகபூமியறுவகைபபெயர்-ஆதியரிவஞ்சம்-நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம-இரணவஞ்சம், தேவகுருவம்-உத்தரகுருவயென, போக பூமி - அறுவகைப்படுமே.

சக்கரவர்த்திகள் வகைப்பெயர் - அரிச்சந்திரனளன் - முசுகுந்தன் புரூரவன், சகரன்கார்த்த - வீரியனென்ன, அறுவகைச்சக்கர - வர்த்திகளாகும்.

எழுதீவின் வகைப் பெயர் - நாவலன்தீவே - இறவித்தீவே, குசையின்றீவே-கிரவுஞ்சத்தீவே, சான்மலித்தீவே - தெங்கின்றீவே, புட்கரத்தீவே - எனத் தீவேழே. எழ்பெருந்தீவிற்கும் - எழ்பொழிலெனப்படும்.

எழுசமுத்திர வகைப்பெபர் - உவரொடு கரும்பு-மதுநெய்தயிர்பால்புனல், மாகடலேழென - வகுத்தனர்புலவர்.

மேலேழுலகவகைப் பெயர் -உலகேழ்பூலோகம் - புவலோகஞ் சுவலோகம, மகாலோகஞ் சனலோகம்- தவலோகஞ் சத்தியலோகம.

கீழேழுலகவகைப் பெயர் - அதலவிதல- சுதலநிதல, தாரதலரசாதல-மகாதலமென்ன,பாதலமோரேழுலகெனப் பகர்வர், இருவகை யேழ்பதி - னுலகென்ப.

டெ-வது,பல்பொரு -கூட்த்-பெயர்த்தொகுதி. உரியந

சத்தகுலபருப்பதவகை பெயர் - இமயமந்தரம் - கைலைவடவிந்தம், நிடதமேகூடம்-நீலகிரியென- குலவரையேழும் - கூறுமென்ப.

எழு மேகவகையின் பெயர் - புட்கலா வர்த்தம் - சங்காரித்தம், ஆவர்த்தமசா-வர்த்தம்துரோணம், காளமுகியொடு-நீலவருணமென, எழுமுகிலின் - பெயராகும்மே.

எழுமழை வகைப்பெயர்- பொன்னும் பூவும் புனலுமணியும், மண்ணொடுகல்தீ - சோரியுமதன்பெயர்.

எழுநகர வகைப்பெயர் - பெருங்களிற்று வட்டம் பெருமணல்வட்டம், எரியின்வட்டம் - புகையின்வட்டம், இருளின்வட்டம் - பெருங்கீழ் வட்டம, அரிபடை வட்டமென - றெழுவகைநரகம்.

சத்தமாதர்கள்வகைப் பெயர் - அபிராமி யிந்திராணி- வைணவிவராகி, கௌமாரி மயேஸ்வரி - மாகாளி யெழுவர்.

எழுவகைத்தாதென்னும் பெயர் - இரதமுதிரம்- என்புதோறசை, மூளைசுக்கிலம் - எழுவகைத தாதே.

செங்கோல்வேந்த னெழுவகைப் பேற்றின் பெயர் - அறம்பொருளின்பம் - அன்பு பொருமை, திறம்பாப்புகழ்மதி - என்றிவையேழும், பெருஞ்செங்கோலின் எழுவகைப்பேறே.

அட்டமாநாக வகைப்பெயர் - அட்டமாநாகம்-வாசுகியநந்தம், விட்டபறபள - மகாபற்பனசங்க, பாலன்றக்கன் - கார்க்கோடகனே, எலுமாகுளிகனென் - றெண்வகைநாகம்.

அட்டதிக்குபாலகர் வகைப் பெயர் - இந்திரனங்கி யமனிருதிவருணன், வந்தவாயு -குபேரனீசாகன், என்னவெண்டிசை - உலோகபாலகர்.

அட்டதிக்குப் பாலகர் சார்திசைவகைப் பெயர் - கீழ்திசைமுதலாச் - சார்ச்சி யுடைமையின், அவ்வவர் பெயரொடும் - அத்திசைமொழிப.

சூரியசந்திரர்சார்திசைப் பெயர் - கீழ்த்திசைபருக்கற்கு - வடதிசைசோமற்கு, சார்ச்சியாக - சாற்றினார்புலவர்.

எண்டிசைக குறிப்பின் வகைப்பெயர் - கொடியும் பூணையும் - சியமுஞாளியும், இடபமுங்கழுதையும் - யானையுங்காகமும், என்பவெண்டிசை - குறிப்பினதாகும்.

அட்டமங்கலவகைப் பெயர் - கவரிநிறைகுடம் கண்ணாடிதோட்டி, முரசுவிளக்கு - பதாகையிணைக்கயல் அளவில்சிறப்பின் - அட்ட மங்கலவகை.

அட்டமூர்த்த வகைப்பெயர் , பார்நீர்தேயு - வாயுவாகாயம், சூரியனிந்திய - மாநட்டமூர்த்தம.

அட்டமாசித்தி வகைப்பெயர் - அணிமா மகிமா - கரிமாவிலகிமா, பிராரத்திபிராகாமியம் - சத்துவம்வசித்துவம், ஆம்பெறற்கரிய - அட்டமாசித்தி.

அட்டாங்கயோக வகைப்பெயர் - இயமநியமம் - ஆசநம்பிராணயாமம், பிரத்தியாகாரம் - தாரணைதியாநம, சமாதியெனப - எண்வகையோகம்.

இவற்றுள் இயமத்தின்வகை - கொல்லாவிரதம் - மெய்ம்மைகூறல், கள்ளாமைபிறர்பொருட் - காதலின்மை, இவ்வயினிந்தியம் - அடக்கலுமியமம.

நியமத்தின்வகை - தவமொடு தூய்மை - தத்துவநூலோர்தல், மனமுவந்திருத்தல் - தெய்வம் வழிபடல், நினையுங்காலை - நியமமாகும்.

சிறப்பிலா வெணபெய ரொச்சவகைப்பெயர் - சிறப்பில்சிதடும். உறுப்பில்பிண்டமும், கூனுங் குறளும் - ஊமையுஞ்செவிடும், மூடமுமுறுப்பு - மருளுமக்கட்கு, திண்சிறப்பில்லா - எண்பெயரொச்சம.

௰௨-வது, பல்பொருட்-கூட்த்-பெயர்த்தொகுதி. உரயிரு

எண்வகைக் காட்சியென்னும் பெயர்- ஐயப்படா மை - அவாவொன்றின்மை-அறிவுவர்ப்பின்மை - மூட மறுத்தல், அறப்பழியழித்தல்- அழிந்தோரைநிறுத்தல்- அறத்தைவிளக்கல் - அறுசமயத்தவர்க்கன்புறல் - ஆகு மென்ப - எண்வகைக்காட்சி.

எண்குண வகைப்பெயர் - அனந்தஞானம்- அன ந்ததரிசனம்- அனந்தவீரியம்-அனந்தசுகியே- நாமமின் மை - கோத்திரமின்மை- ஆயுவின்மை- அழியா வின்ப மென்- றேயுங்காலை - இறைவனெண்குணம்.

எண்வகைக் குற்றத்தின் பெயர்-ஞானாவரணியம்- தரிசனாவரணியம் -வேதநீயம்- மோகநீயம்- ஆயுநாமம்- கோத்திரமந்த - ராயமென்ப - எண்வகைக் குற்றம்.

வணிகரெண்குண வகைப்பெயர்- தனிமையாதல் முனிவிலனாதல்- இடனறிந்தொழுகல் - பொழுதொடுபு ணர்தல்- உறுவது தெரிதல் - இறுவதஞ்சாமை- ஈட்ட ல் பகுத்தல் - என்றிவையெட்டும் - வாட்ட மில்லா-வ ணிகரதியற்குணம்-

எண்வகைக் கணமென்னும் பெயர் - நீரின்கண மும்-தீயின்கணமும்- அந்தரகணமும- இயமானன்கண மும் - மதியின்கணமும் - எரிகதிர்க்கணமும் - மாருத கணமும்-மாநிலக்கணமும்-எட்டுமுன்னச் - சீர்க்குவரு ங்கணம்.

முதற்சீரிலக்கணவகை-அசைமூன்றதுவே-முதற் சீரிலக்கணம.

இவற்றுள் நீரின்கணவகை - நேர்முதலாகி- நிரை யிணைபின்வரின் - நீரின்கணமென- நிகழுஞ்சீரே.

தீயின்கணவகை - நேர்நடுவாகி-நிரையிருபாலும்- சேருஞ்சீரது - செந்தீக்கணமே.

அந்தரகணவகை - இறுதிநேரால்-இணைநிரைமுன் னர்-வருஞ்சீரந்தர - கணமெனவழங்கும்.

இயமானன்கணவகை - நேர்மூன்றாகிய சீரியமானன்.

மதியின்கணவகை - முந்து நிரையாய் - இனைநேர் பின்வரில்- இந்துவின்கணமென் - றியம்பப்படுமே.

எரிகதிர்க்கணவகை- நிரைநடுவாகி-நேரிருபால்வரின் - எரிகதிர்க்கணமென் - றிரம்பல்வேண்டும்.

மாருதகணவகை - இறுதிநிரையாய் - இணைநேர் முன்னர் - வருசீர்மாருத - கணமெனவைப்பர்.

நிலத்தின்கணவகை - நிரைமூன்றதுசீர் - நிலத்தின்கணமே.

இவ்வெட்டினுணற்கணவகை -நிலனுநீரும் மதியியமானனும் - கலமிகுமுதல்வரில்- பிறநாலூனம்.

எண்வகை மெய்ப்பரிசத்தின் பெயர் - ஒட்டுதல் பிடித்தல்- தீண்டறடவுதல்- கட்டுதல் வெட்டல்-குத்தலூன்றலென - றெட்டுந்தக்க - மெய்ப்பரிசமென்ப-

எண்வகைக் கணிதத்தின்பெயர் - சங்கலிதம் விபலிதம்-குணநம்பரகாரம்- வர்க்கம்வர்க்க - மூலங்கனரிமொடு கனமூலமென்னக் - காட்டுருமணகணிதம்.

எண்வகை மணத்தின் பேயர் - பிரமம்பிரசா- பத்தியமாரிடம் - தெய்வங்காந்தருவம் -ஆசுரமிராக்கதம்- பைசாசமென்ன - பகருமெண்கணமே.

எண்வகை வெற்றியின் பெயர் - (வெண்பா) வெட்சிநிரைகவர்தன மீட்டல் கரந்தையாம் - வட்கார்மேற்செல்வது வஞ்சியாம - உட்கார் -எதிரூன்றல் காஞ்சியெயில்காத்தனொச்சி - யதுவளைத்தலாகுமுழுஞை(சூத்திரம) அதிரப்பொருவது தும்பையாகும் - போர்க்களத்துமிக்கார்செரு வென்றது வாகையாம் - அத்திணைத்தொழிலு மத்திணைப்பூவும் - அப்பெயர் பொருத லந்நிலத்துரிவே.

எண்டிசையானைப்பெயர் - ஐராவதமொடு - புண்டரீகம், வாமனமோடு - குமுதமஞ்சனம், புட்பதந்தம் - சார்வபூமம், சுப்பிரதீபம் - என்னச்சொல்லும், எண்டிசையானைக் - கியலும்பெயரே.

நவகண்டத்தின் பெயர் - வடபால்விதேகம் - தென்பால்விதேகம், கீழ்பால்விதேகம், - மேல்பால்விதேகம், வடபாலிரேவதம் - தென்பாலிரேவதம், வடபாற்பாதம், தென்பாற்பாதம், மத்திமகண்டமென் - றித்திறமென்ப, நாவலந்தீவின் - நவகண்டப்பெயரே.

நவபுண்ணியத்தின் பெயர் - எதிர்கொளல்பணிதல, இருக்கைகானீர், புதுமலர்தூபம் - விளக்கே புகழ்தல், அறுசுவையுண்டி - அருந்தவர்க்காற்றுதல், நவபுண்ணியத்தின் - நாமமாகும்.

நவதாரணைப்பெயர் - நாமதாரணை - வச்சிரதாரணை, ம... தாரணை - சித்திரதாரணை, செய்யுட்டாரணை - நிறைவுகுறைவாகிய, எண்பொருட்டாரணை - சத்ததாரணை, வத்துதாரணை - சதுரங்கதாரணை, நவதாரணையின் - நாமமாகும்.

நவதாளப்பெயர் - அரிதாளமரும - தாளஞ்சமதாளம், சயதாளஞ் சித்திர - தாளந் துருவதாளம், நிவிர்த தாளம் - படிமதாளம. விடதாள மிவையே - நவதாளமென்ப.

நவமணிப்பெயர் - வைரம்வைடூரியம் - முத்துமாணிக்கம, பவளங் கோமேதகம் - இந்திரநீலம், மரகதம் புட்பராகம் - நவமணிப்பெயரே.

நாடகநவரசப் பெயர் - சிங்காரம் பெருநகை - கருணைவீரியம, அற்புதமபயம்சௌத - திரங்குற்சை சாந்தம், என்னநாடகத் - தியலுநவரசம்.

பத்துத்திசைப்பெயர் - கிழக்குந்தெற்கும் - மேற்கும்வடக்குமென, நடக்குபெ... - நாற்பெருந்திசையும்,

அந்தராளம் திசைசாற்கோணம், கீழ்மேற் றிசையொடு பத்தெனக்கிளப்பர்.

தசாங்கத்தின்பெயர் - ஆறுமலையும் - யானையுங்கு திரையும், காடுமூரும் - கொடியமுரசும், தாருந்தேரும்-தசாங்கமெனப்படும், தேறினதற்குச் சின்னமுமென்ப.

அருச்சுனன்றசநாமத்தின் பெயர் - பற்குனன்சுவே த-வாகனன்பார்த்தன், சவ்வியசாசி- கிரீடி றநஞ்சயன், விசயன்வீபற்சு - காண்டிவன் கிருட்டினன், அருச்சுன ன்றச-நாமங்களாகும்.

வேளாளர் பத்துவகைத் தொழிற்பெயர் - ஆணை வழிநிற்றல்- அழிந்தோரைநிறுத்தல், கைக்கடனாற்றல்-கசிவகத்துண்மை, ஒக்கல்போற்றல்- ஓவாமுயற்சி, மன் னிறைதருதல் - ஒற்றுமை கோடல், விருந்து புறந்தரு தல்- திருந்தியவொழுக்கம், வேளாண்மை மைந்தர்க் - கோரீரைந்தே.

அரிதசாவதாரப் பெயர் - மீனேயாமை- வராகநர சிங்கம், வாமனன்பரசி, ராமணிராமன், பலதேவன்வசு-தேவன்வருகற்கியென், றாகுமீரைந்தும்- அரியவதாரம்.

சிற்பத்தொழிற் பத்துறுப்பின் பெயர் - கல்லுமு லோகமும - செங்கலுமரமும், மண்ணுஞ்சுதையும-தந் தமுமவண்ணமும், கண்டசருக்கரையும்—மெழுகுமென் றிவை, பத்தேசிற்பத்-தொழிற்குறிப்பாவன

ஏகாதசவுருத்திரர் பெயர் - மாதேவன் சிவன்-உ ருத்திரன் சங்கரன், நீலலோகிதன் - ஈசானன் விசயன், வீமதேவன் - பவோற்பவன் காபாலி, சௌமியனேகா தச உருத்திரராகும்.

துவாதசாதித்தர் பெயர் - தாத்துருசக்கரன்-அரி யமன்மித்திரன், வருணனஞ்சுமான் - இரணியன் பக வான், திவச்சுவான்பூடன்- சவித்துருது வட்டன, என சசூரியற்கு - பன்னிருபெயரே.

மெஉ-வது,பல்பொருட்-கூட்ட-பெயர்த்தொகுதி. உாமை

உயிர்வேதனைபன்னிரண்டு வகைப்பெயர்-அனலு
ஞ்சேதமும் - வாதமும்பனியும், புனலுமவாதமும்- விட
முமவிடமருந்தும், பசியுநீர்வேட்கையும் - பிணியுமுன்
வறுமையும், உயிரின்வேதனை-ஒரீராறே.

பதினெணபாடையின்பெயர்-அங்கம்வங்கம் -கலிங்க
ங்கௌசிகம், சிந்துசோகம், திரவிடஞ்சிங்களம-மகதங்
கோசலம், மராடங்கொங்கணம், துளுவஞ்சாவகம-சீகங்
காம்போசம், பருணம்பப்பரமென- பதினெண்பாடை.

தேவர்பதினென்கண வகைப்பெயர் - அமரர்சித்
தர் - அசுரர்தைத்தியர், கருடர்கிந்நரர்- கிம்புருடர்காந்
தருவர், இயக்கர்விஞ்சையர் - இராக்கதர்பூதர், பைசா
சாந்தரா- முகிவருரகர், ஆகாயவாசியர்- போகபூமியரெ
ன, பதினெண்கணத்தின் - பகுதியாகும்.

அரசர்க்கு மூவகையிற் பதினெண்கிளை வகைப்
பெயர்-அமாத்தியர் புரோகிதர் - சேனாபதியர், தவாத்
தொழிற்றூதர் - சாரணரொன்றிவை, அரசர்க்காகும்-ஐ
ம்பெருங்குழுவே, காரணக்கிளைஞரும்-கமவிதிகாரரும,
கககச் சுற்றமு - கடைகாப் பாளரும, நகரமாக்களும -
நனிபடைத்தலைவரும். இவுளிமறவரும்- யானைவீரரும்.
அரசாக்கெணடுணை- ஆகுமென்ப. அடுத்தகட்பாளரும்
அந்தணாளரும். மடைத்தொழி லாளரும - மருத்துவக்
கலைஞரும், நிமித்தகாரரும்-நீணிலமேவகதாக், குறைதத
வைமபெயர் - உறுதிசுற்றம். இஙஙனம, உரைத்தமுப
பாலும் - உயர்குடைவேகதர்க்கு, பகுத்த பதினெண-
கிளைப்பாலோரே.

யாககையிற் பதினெணகுற்றப் பெயர் - பசியுநீர்
வேட்டலும - பயமுமவெகுளியும்,உவகையும்வேண்ட
லும்- வினைப்புமுறககமும, நரையும்நாய்படுதலும - மர
ணமுமபிறபபும; மதமுமின்பமும - அதிசயமும்வியர்த

தலும், கேதமுங் கையறவும் - ஆகுமென்ப, மாயயாக்கைக்கு - பதினெண்குற்றம், இக்குற்றநீக்கியோர்- வச்சிரயாக்கையோர்.

பதினெண்புராணத்தின் பெயர் - மச்சியம்கூர்மம்-வராகம்வாமனம், பிரமம் வைணவம்-பாகவதஞ் சைவம், இலிங்கம்பௌடிகம்- நாரதீயங்காருடம், பிரமகைவர்த்தம் - மார்க்கண்டேயங் காந்தம், பிரமாண்டமாக்கிநேயம்-பதுமமென்றிவை, பாற்படுதினெண்-புராணமாகும்.

உபபுராணம்பதினெண்வகைப் பெயர் - உசநங்கபிலம் -காளிசநற்குமாரம், சாம்பவஞ்சிவதன்மம்- சௌரந்துருவாசம், நந்திநாரசிங்கம-நாரதீயம்பராசரம், பார்க்கவமாங்கிரம்-மாரீசமாநவம், வாசிட்டலிங்கம-வாருணமெனன, உபபுராணப்பெயர் - அறுமூன்றாகும்.

தருமநூல பதினெண்வகைப் பெயர் - மனுவே யத்திரி - ஔரிதம் விண்டு, இயாஞ்ஞு வற்கியம - உசனமாங்கிரசம், இயமமாபத்-தம்பமசமவர்த்தம், காத்தியாயனம் - பிரகற்பதிபராசம், வியாசம் சங்கலிதம- தக்கங்கௌதமம், சாதாளமமோடு - வசிட்டமிவையே, தருமநூல்பதினெட் - டாகுமென்ப.

பதினெண் யாகவகைப் பெயர் - அக்கினிட்டோமம் - அத்தியக்கினிட்டோமம், உத்தியஞ்சோடசீ-வாசபேயம், அதிராதகிரமப் - தோரியாமம், அக்கினியாதேயம -அக்கினிகோததிரம், தரிசபூரணமாசம - சாதுர்மாசியம, நிருடபசுபந்தம-ஆக்கிரயணம, சௌத்திராமணி-அட்டகைபார்வணம், சிராத்தம் சிராவணி - ஆக்கிரகாயணி, சைத்திரிமீயாடு - ஆசுவ யுசியென, பதினெட்டியாகப் - பலபெயராகும.

இருபத்தைந்து தத்துவத்தின் பெயர் - நிலநீர்செருப்புக்காற்-றுகாயமென்ன, அஃவினின்ற- ஐயபெரும்

பூதமும், ஐந்துவாயிலும் - அவற்றின்புலனும், கைகால் குதம்வாய் - மாநுடக்குறியென, கருமேந் திரியங்கள் - ஐந்துமவற்றொடு; மநம்புத்தியாங்காரம் - சித்தமென்கும இயமாநமேனுடிரு-பதனைந்துதத்துவம்.

இருபத்தெட்டலங்காரப்பெயர் -உருவகமுவமை-வழு டக்குநிலைமடக்கு, விரிசுடர் விளக்கென - விரவி வருணவும, வேற்றுமைநிலையே-வெளிப்படுநிலையே, வா ர்த்தைதன்மை -பிறர்பொருள்வைப்பென, பாற்படக்கி யந்த- பகுதியின் வருணவும், சிறப்புமொழி சிலேடை - மறுத்துமொழிநிலையே. நேர்ச்செயட்டொடர்-தொகை மொழிமிகைமொழி, உடநிலைகூட்டம - உவமாநமுருவ கை, நுவலாநுவர்சி-தலைகட்டியமொழி, நிதரிசனம் பா ராட்-டொருங்கியநிலையே, ஐயமுயர்வே- விரவியல்வா ழ்த்தென, எய்தற்குரிய எழுநான்கலங்காரம.

முப்பத்திரண் டறத்தின் பெயர் - ஆதுலர்சாலை- ஓதுவார்க்குணவறு, சமயத்தோரக் குணவு - பசுவுக்கு வாயுறை, சிறைச்சோறையம் - தின்பண்டமகச்சோறு, மகப்பெறுவித்தல்- மகவளர்த்தன மகப்பால, அறவை பிணஞ்சுடுதல் - அறவைத்தூரியம், வண்ணார்நாவிதர்- வதுவைபுண்ணோய், மருந்துகண்ணாடிகா - தோலைகண் மருந்து, தலைக்கெண்ணெய் பெண்போகம - சுண்ணம் பிறர்துயர், காத்தறண்ணி - நந்தாமடந்தடாகம், காவா வுரிஞ்சு-கடுதறியேறு, விடுத்தல்விலைகொடுத்து- கொலை யுயிர்மீட்டல், இச்செயன்முப்பத -திரண்டறமென்ப.

முப்பத்து முத்தேவர் வகைப் பெயர் - ஆதித்தர் பன்னிருவர் - அச்சுவிநிகளிருவர் ஈசர்பதினொருவ[illegible] ண்மர்வசுக்கள் ஆகமுப்பத்து [illegible]முத்தேவரென்ப.

ஓரறிவுயிர்வகைப் பெய[illegible]ன்றேபுலன - தொ[illegible] றேயுடைமையின் மற்றைப்[illegible]மரனுமோரறிவே

ஈரறிவுயிர்வகைப் பெயர் - உற்றறிபுலனும் - நாவு முடைமையின் அட்டையுநந்தும் - போல்வதீரறிவே.

மூவறிவுயிர்வகைப்பெயர் - உற்றறிபுலனும் - மூக் குமுடைமையின் - முற்பெருசிதலெறும் - பிணையமூவ றிவே.

நான்கறிவுயிர்வகைப் பெயர் - உற்றறிபுலனு மூ க்கொடுகண்ணும் - பெற்றவண்டும்-ஞெண்டுநாலறிவே.

ஐந்தறிவுயிர்வகைப் பெயர்- உற்றறிபுலனும்- மூக் கொடுகண்செவி - மக்களுமாவும்- ஐந்தறிவினவே.

ஆறறிவுயிர்வகைப் பெயர்- மநத்தோடாறறி-வின ரேமக்கள் - ஒருசார்விலங்கும்-அதுபெறற்குரிய.

காவியவியற்கைவகைப் பெயர் - காவியவியற்கை விரிக்குங்காலை - ஆரியநதமிழால்; நேரிதினடக்கி- உலகி ன்றேற்றமும் ஊழியினிறுதியும் - வகைசாற்றுண்ணா குறுவாதியரும்- வேதகாவினர்- வேதியரொழுக்கமும்- ஆதிக்காலத்-தரசர்செய்தியும்-மவ்வளர்காட்டால்-அறியு மாற்றலும்- ஆடியும்பாடியும்-அறிவுவாக்கிளத்தல்.

ஆண்பாற் பிள்ளைப்பாட்டின் வகைப்பெயர்- திங் களிரண்டில்- தெய்வக்காப்பும-ஐந்தாந்திங்களில்- செங் கீரையும்- ஏழாந்திங்களில்-தாலப்பரட்டும்-எட்டாந்திங் களில் - இன்னமுதூட்டலு - ஒன்பதாந்திங்களில் - சப் பாணியும்-பத்தாந்திங்களில் - முத்தங்கூறலும் - ஆண்டு வளையகவயின் - ஈண்டுவருகிறன்றலும் - ஈரெண்டிங்க ளின் - அம்புலிகாட்டலும்-இரண்டாமாண்டில் - சிறுப றைகொட்டலும் - மூன்றுமாண்டில் -சிற்றில்சிதைத்த ம்-நாலாமாண்டில்- தேருருட்டலும்,- வைத்தமுந் ன்காண்- டெல் யில் மகச்சிற்சுரிகை- காமுறப் புனைதலும்-பெற வ-பிள்ளைப்பாட்டே.

பெண்பாற் பிள்ளைப்பாட்டுவகைப்பெயர் - ஆண்டுவரையகவயின்- முன்னுரைத்தனவும்- மூன்றுமாண்டில்- குழமன்மொழிதலும்- ஐந்தின்முதலா-ஒன்பதின்காறும் - ஐங்கணைக்கிழவனை - ஆர்வமொடுநோற்றலும்-பனிநீர்தோய்தலும் - பாவையாடலும் - சிறுசோறடுதலும் - சிற்றிலிழைத்தலும்- ஊசலாட்டுமென்- றிவையுள்ளிட்டு - பேசியபெண்பாற் - பிள்ளைப்பாட்டே.

பேடியிலக்கணவகைப் பெயர் - பேடியிலக்கணம்-பேசுங்காலை, ச்சுப்பேசலும்-நல்லுரையோதலும், அச்சுமாறி-ஆண்பெண்ணாகியும், கைத்தலமொன்றை- கடுகவீசியும், மத்தகத்தொருகை - மாண்புறவைத்தலும், விலங்கிமிர்த்தலும்-வழிவேறாகியும், துளங்கித்தூங்கி-சுழன்றுதுணிந்து, சக்குசாணியும்-கடம்பலபயின்றும், பக்கம்பார்த்தும்-பாங்குதிருத்தியும், காரணமின்றி - கடிபலகொண்டும், வாரணிகொங்கையை - வலியசலிந்தும்,இரங்கியுமழுதும் - அபர்ந்தருவருத்தும், குரங்கியுங்கோடியும் - கோதுகள்செய்தும், மருங்கிற்பாணியை - வைத்தும் வாங்கியும், இரங்கிப்பேசியும் - எல்லேனென்றும், இன்னவைபலவும் - இயற்றுதவியல்பே.

கரந்துறைகோளின் வகைப்பெயர் - அராக்கோளிரண்டும்-பருதியுஞ்சூரியனும், பரிவேடமுந்தூமமும்-இந்திரவில்லும், பெருகுவான்மீனு மகரந்துறைங்காளே.

திருப்பொறிவகைப்பெயர்- முடிகுடைகவரி-தோட்டிமுரசு, சக்கரம்யானை- கொடிமதின்தோரணம், நீர்க்குடம்பூமாலை- சங்குகடல்மகர ஆமையிணைக்கயல்-சிங்கந்தீபம், இடபமாசனம்-இ… திருப்பொறி,ஆகுமென்பர்- அறிந்திசினோரே.

ஐம்புலன்றுயிரிழக்கும் வகைப் பெயர் - யானையூ
றில் - மீனதுசுவையில், அசுணமிசையில் - அளிகாற்றத
தில், ஏனைப்பதங்கம் - உருவங்கண்டுயிர், இழப்பவாகும் -
என்மனார்புலவர்.

அரனூர்தியாயுதவகைப் பெயர் - அரனுடையூர்தி -
இடபமாகும், பரசுசூலம் - பினாகம்வில்படையே.

அரியூர்தியாயுதவகைப் பெயர் - அரியுடையூர்தி -
கருடனாகும், சக்கரஞ்சங்கு - தண்டுவாள்சாரங்கம, பல
மிக்கமாயோன் - பஞ்சாயுதமே.

பலதேவன் படைகொடிவகைப பெயர் - பலதேவ
ன்படை - கலப்பையாகும், கொடிபனையாமென - கூறி
னர்புலவர்.

அயனூர்திபடை கொடிவகைப் பெயர் - அயனு
டையூர்தி - அன்னப்புள்ளு, படைபாசமங்குசம் - கொ
டிவேதமென்ப.

குமரனூர்திகொடிபடை வகைப்பெயர் - குமரனூ
ர்தி - மயிலுமயானையும், கொடியேகோழி - படைவே
லாகும்.

சாத்தாவினூர்தி கொடிதாரவகைப் பெயர் - சாரி
யூர்தி - யானையாகும், கோழியவர்க்கு - கொடியாகும்மே -
பூரணைபுட்கலையும் அவர்தாரமாகும்.

காமனகொடிபடை வகைப்பெயர் - காமன்கொடிமீன்
கரும்புவில்லும், பூவவன்வாளி - பொருபடையாகும்.

இயமனூர்தியாயுதவகைப் பெயர் - இயமனுடை
யூர்தி. எருமையேறு - படைபாசந்தண்டும் - ஆகுமென்ப.

காலனாயுதவகை[illegible] பெயர் - கூற்றின்படைகொடு
ம் - கணிச்சியாகும்.

குபேரனூர்தி[illegible]கைப்பெயர் - குபேரனூர்தி - புட்
பகவிமானமும், க[illegible]மும் - ஆமெனகவில்வர்.

டூ-வது, பல்பொருட்-கூட்ட-பெயர்த்தொகுதி. உ௨௫

சூரியனூர்தி வகைப்பெயர்-தனிக்காற்பொற்றேர்-அருக்கனூர்தி.

சந்திரனூர்தி வகைப் பெயர் - வெண்மதி யூர்தி - விமானமாகும்.

இந்திரனூர்தி படைகொடி வகைப் பெயர் - இந்திரனூர்தி - வெள்ளைவாரணம், படையேவச்சிரம் - இடிகொடியாகும்.

காளியூர்தி கொடிவகைப் பெயர்-காளியூர்தி - யாளியாகும் - பேயதாகும் - அவள்பெருங் கொடியே.

மூதேவியூர்திகொடி வகைப்பெயர்-கழுதையூர்தியும்-காக்கைக்கொடியும்-மொழியுங்காலை- மூதேவித்காகும்.

சேரன்கொடி பாண்டியன் கொடிவகைப் பெயர்-சேரற்குவிற்கொடி - தென்னற்குக் கயற்கொடி.

சோழன்கொடிவகைப் பெயர் - சோழற்குப்புலிக்கொடி - ஆகுமென்ப.

வேள்புலவரசர் கொடிவகைப் பெயர்- கேழல்வேள்புல- அரசர்கொடியே, அவ்வவர்பெயரும்-கொடியும் படையும் அவ்வவர்தம்மோ-டறிந்துணர்ந்து கேளுமே.

அரசுவாவின் குறிவகைப் பெயர் - காலோர்நான்கும்- தனிக்கையுங்கோசமும், வாலுறுப் போடெழும்-மாநிலந்தோய்ந்து, பாலுஞ்சங்கும் போலுங்காலுகிறது, காலினுஞான்ற - ஒருதனிக் கையினும, வாயினும்வாலினும் - மருப்பினுங்கோறல்வல்லது, பதின்மூன்றுமுழச் சுற்றுடைத்தாகி, ஏழுமுழமுயர்க் தொன்பதுமுழநீண்-டது, தீயுமிழ்சிறுகண்ணும் - செம்புகரு முடைத்தாய்-முன்புயர்ந்துபின்-பணிந்ததாயின், [illegible]வ்வியல்யானையை அரசுவாவென்ப.

அநுலோமர்வகைப்பெயர் [illegible]பாரசர்- வணிகர்வேள[illegible]ளரென; நாற்குலத்து [illegible] தங்குலகடை

வின், உயர்ந்தவாணினும்- இழிந்தபெண்ணினும், பிறந்த கூட்டத்- தவரனுலோமர்.

பிரதிலோமர் வகைப்பெயர் - இழிந்தவாணிலும்- உயர்ந்தபெண்ணிலும், பிறந்தகூட்டத் - தவர்பிரதிலோமர்.

அந்தராளர் வகைப்பெயர் - அநுலோமகுலத்-தாணினுவவ்வழி, பிரதிலோமகுலப் - பெண்ணினு மாகி - அடுத்தகூட்டத்தவர், அந்தராளர்.

விராத்தியர்வகைப்பெயர்- பிரதிலோமகுலத்- தாணினுமவ்வழி; அனுலோமகுலப்- பெண்ணினுமாகி, வியந்தோர்கூட்டத்துப் - பிறந்தோர்விராத்தியர்.

பல்லக் கணக்குவகைப் பெயர் - இருவிரலககத் - தறுவிரலாழத், தொருகுருகிறையப் - பள்ளியாட்டுமயிர்த்தொகை, பற்றியதாகும் - பல்லமென்கணக்கே.

பதாதிவகைப் பெயர் - ஒருபெருங்களிறும் - ஒருபெருந்தேரும், புரவிசான்கும் - படைஞரைம்பதின்மரும், பதாதியென்று-பகரப்படுமே.

சேனாமுகவகைப் பெயர் - பதாதிமும்மடி - சேனாமுகமே-

குமுதவகைப் பெயர் - சேனாமுகமும்மடி-தானுங் குமுதம்.

கணவகைப் பெயர் -குமுதமும்மடி - கொண்டது கணமே.

வாகினிவகைப்பெயர் - கணமும்மடியின் - பெயர் வாகினியே.

பிரதனைவகைப் பெயர் - வாகினிமும்மடி - ஆகும் பிரதனை

சமுகவகைப் பெயர் - பிரதனைமும்மடி - ஆகுஞ்சமூகம்.

டைவது, பல்பொருட்-கூட்ட-பெயர்த்தொகுதி. உடன

அநீவகைப் பெயர் - சமூகமும்மடி- அநீகமாகும்.

அக்குரோணிவகைப் பெயர் - அநீகமை யிருமடி- அக்குரோணி.

ஒன்றுபத்தின் பெயர் - ஏகமொன்றே - தசம்பத் தாகும்.

நூற்றின்பெயர் ஆயிரத்தின்பெயர் - நூறு தசமே- சகஸ்திரமாயிரம்.

பதினாயிரத்தின் பெயர் - பதினாயிரம்பெயர்-ஆயுத ாகும்.

நூறாயிரத்தின்பெயர் - ஆயுதம்பத்தே-நியுத நூறு ரம்.

பத்துநூறாயிரத்தின் பெயர் - நியுதம்பத்தே - பிர யுதமாகிய, இயலும்பத்து - நூறாயிரமே.

நூறு நூறாயிரத்தின் பெயர் - பிரயுதம் பத்தே- கோடியென்ப, வரைத்தநூறுநூ- றாயிரமென்னும்.

அற்புதமென்னும் பெயர் - கோடிபத்தே- அற்புத மாகும்.

சமுத்திரவகைப் பெயர் - அற்புதம்பத்தே - சமு த்திரமாகும்.

அத்தியவகைப்பெயர் - சமுத்திரம்பத்தே-அத்திய மாகும்.

மத்தியவகைப்பெயர் - அத்தியம்பத்தே - மத்திய மாகும்.

பாரதவகைப்பெயர் - மத்தியம்பத்தே பாரதமா கும்.

மகாகும்பத்தின் பெய[illegible]கோடி - மகாகும்ப ாகும்.

நிகர்வ வகைப்பெயர் - மகாகும்பம்பத்து- நூறுயி ரங்கோடி.

மகாபற்ப மென்னும் பெயர் - நிகர்வநூறுயிரம் - கோடிமகாபற்பம்.

பிரமகற்பமென்னும் பெயர் - சங்கம்பாரதம்-பத் தேபிரமகற்பம்.

யுகத்தின்பெயர் - கிரேதாயுகமுந் திரேதாயுகமுந் துவாபரயுகமொடு கலியுகம்நான்கே,இப்படியோர் சது யுகமிரண்டாயிரஞ்,சதுமுகப்பிரமன்றனக்கொருநா இவன்பகலொன்றிற் பதினலிந்திரர், பதம்பெறும் டமாம் பார்தனிற் புகன்றனர், வயதொருநூறும் வாழ் ந்தபிரமா, கோடியளியின் விண்டுவுக்கொருநாள், விண் டுவொருகோடி விளியுங்காலே,அரன்மனையாள்குழ லவி ழ்ந்துமுடிக்குப, போதிலையென்று புகன்றனர் புலவர்.

செம்பொற்கிடையான்- அம்பற்சேந்தன்- அன்ன தாளன் - நலமிகுநாட்டத்தன் - பன்னியசிறப்பிற்-பன் னிரண்டாவது,

பல்பொருட்கூட்டத் தொருபெயர்த் தொகுதியொடு
பன்னிருதொகுதியும் பண்பொடு
மு ற் றி ன.

---